வங்கவீரர்

பழ.மெ.பெரி.மெய்யப்பன்.

காரைக்குடி.

# சுபாஷ் சந்திரபோஸ்



(அழகிய ஆப்டோன் படத்துடன் கூடியது.)

விலை அணா ஒன்று

சேலம் நாவல் பிரசுராலயம், சேலம்.

தேசிய வீரர்கள் சரித்திரம் மலர்—1

வங்க வீரர்

# சுபாஷ் சந்திர போஸ்

அழகிய ஆப்டோன் படத்துடன் கூடியது.

---

ஆசிரியர்;

கோவை ஸி. கே. கணபதி அய்யர்.

---

Published at

The Salem Novel Publishing Co., Salem.

 1938 [விலை அணா ஒன்று

சந்தோஷமே வாழ்க்கையின் வெற்றிக்கு அறிகுறி! ::

. :: :: நோயற்ற வாழ்வுக்கு அடிப்படை!!

●

- சிறிப்பின் சிகரமான எங்கள் -

# “ தேவாவின் காதல் ”

என்ற நெஞ்சையள்ளும் குற்றமற்ற ஹாஸ்யம், நவீன காதல் வைபவம், உள்ளத்தைப்பரவசப்படுத்தும் சம்பவங்கள் நிறைந்த நாவலைப் படித்துப்பாருங்கள்.

●

ஆரம்பம் முதல் அந்தம் வரையில் படிக்காமல் கீழே வைக்க முடியாது.

●

அழகிய படம் 100-பக்கங்கள் கொண்ட

புஸ்தகம் 1-க்கு விலை 4-அணா.

●

1. கொடுக்குமூஞ்சி குரங்குதுரை, 2. தொட்டதுபாதி விட்டதுபாதி, 3. காதல்வேட்டை, 4. கள்ளன்வலை குள்ளன் வேலை 5. காதல்விநோதம் கலியாண வைபோகம் போன்ற ருசிகரமான தலைப்புகளோடு கூடியது.

●

இன்றே உங்கள் நியூஸ் ஏஜண்டைக் கேளுங்கள்.

காபிகள் கிடைக்கப் பெறாதார் ஐந்து அணா தபால் தலை அனுப்பினால் அடுத்தினமே அவர்கள் விலாசத்திற்கு ஒரு பிரதி ஓடிவரும்.

**நாவல் பிரசுராலயம், சேலம்.**

உ

## வங்க வீரர்

# சுபாஷ் சந்திரபோஸ்.

### 1. வீரன் விஜயம்



வருஷ ஆரம்பத்தில் புதுப் பஞ்சாங்கத்தை எடுத்து அவ்வருஷத்திய கிரகங்களின் பலாபலன்களைப் படித்தாலும், படிக்கக் கேட்டாலும், நல்ல ஆரோக்கியமும், சகலவித சம்பத்தும், சௌபாக்கியங்களும் உண்டாகுமென்பது பலருடைய கருத்து. அது அவரவர்களுடைய மனோபாவத்தையும், நம்பிக்கையையும் பொருத்த விஷயம். ஆனால் கீழே குறிப்பிடப்பட்டிருக்கும் விஷயத்தில் மட்டிலும் சிறிதும் சந்தேகமே படவேண்டியதில்லை. பலன் நூற்றுக்கு நூறு என்று உறுதியாய்ச் சொல்லலாம்.

எவனொருவன் நாட்டுக்கு உழைக்கும் தேசத் தலைவர்களிடம் பக்தி பரவசங்கொண்டு அவர்களைத் தெய்வமாக நினைத்து வணங்குகின்றானோ, அடியார்களின் ஜீவிய சரித்திரங்களைப் படிக்கின்றானோ, அவனுக்கு தேசீய சிந்தனை ஏற்பட்டு அவனே சிறந்த தேச பக்தனாகிவிடுகின்றான். எந்த

நாட்டில் மக்களிடம் தேசிய உணர்ச்சி மேலிட்டு அடிமைத்தனம் எனும் காரிருளை ஒழிக்க முற்படுகிறார்களோ, அங்கு சுயேச்சை என்ற உதய சூரியன் தோன்றிப் பிரகாசிக்கின்றான். இனி நம் நாட்டில் நடைபெறப்போகும் சுயராஜ்யப் போரில் நம் மக்கட்குத் தளரா உணர்ச்சியும், உற்சாகமும் வேண்டுமாதலால் பழுத்த தேசிய வீரர்களின் சரித்திரங்களை ஒவ்வொருவரும் படிக்கவேண்டியது மிகவும் அவசியமாகும். அதிலும் முக்கியமாக இவ்வாண்டில் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் வங்க வீரர் சுபாஷ் சந்திரபோஸின் சரித்திரத்தை ஒவ்வொரு தமிழரும் படிக்கவேண்டியது இன்றியமையாததாகும். அன்னாரின் சரித்திரமானது ஒவ்வொரு தேசபக்தருக்கும் தேசப் பணியிலீடுபடச் சிறந்த வழிகாட்டியாக இருக்கும்.

வங்காளத்தில் கொடாலி என்பது ஓர் கிராமம். அக்கிராமத்தில் 1897-ம் வருஷத்தில் சுபாஷ் சந்திரபோஸ் பிறந்தார். இவர் தந்தை ஜானகிநாதபோஸ் சிறந்த கல்விமான். சட்டத்தில் கரை கண்டவர். இவருடைய பெயர் எங்கும் பிரசித்தி பெற்றிருந்தது. இவர் தம் மகனைப் பெரிதும் பாராட்டிச் சீராட்டி வளர்த்துவந்தார். விளையும் பயிர் முளையிலே என்பதுபோல சிறு வயதிலேயே சுபாஷ் போஸ் சிறந்த புத்திக் கூர்மை படைத்தவராக இருந்தார். 'மகன் தந்தைக் காற்றுமுதவி இவன் தந்தை என் னோற்றான் கொல்' என்ற சொல்லின்படி யாவரும் சிலாகித்துப் பேசும்விதத்தில் அன்பு, அடக்கம், பரோபகாரம் போன்ற பல உயரிய குணங்களுக்கு இருப்பிடமாய் விளங்கிவந்தார்.

இவர் மிகவும் சுருசுருப்புள்ளவர். எவ்விஷயங்களையும் ஒரு நொடியில் அறிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் படைத்தவர். எவ்வகுப்பிலும் இவருக்கே முதன்மை ஸ்தானம். எப்பரீக்ஷையிலும் தோல்வியுற்றதே கிடையாது. மெட்ரிகுலேஷனில் தேர்ந்தெடுக்கப்பட்டதும் கல்கத்தா மாகாணக் கல்லூரியில் போய்ச் சேர்ந்தார். 1915-ம் ஆண்டில் இன்டர்மீடியேட் பரீக்ஷயில் தேறினர். இவர் கல்லூரி படிப்போடு நின்றுவிடாமல் அறிவு வளர்ச்சி உண்டாக்கத்தக்க சகல நூல்களையும் படித்துவந்தார். அக்காலத்தில் இவர் அரசியல் விஷயங்களில் விசேஷ கவனத்தைச் செலுத்தியதுடன் பத்திரிகைகளைப்படித்து அதன் மூலம் அரசியல் நிலைமையையும் அறிந்துவந்தார். ஒவ்வொரு சமயம் தன் நண்பர்களுடன் ராஜீய நிலைமைபற்றி தர்க்க வாதம் செய்வார். இவர் சுயமரியாதை உணர்ச்சி மிகுதியும் பெற்றிருந்ததுடன் சுயராஜ்ய தாகம் பெரிதும் உடையவராக இருந்தார்.

அக்காலத்தில் இவரது சுயமரியாதையைப் பாதிக்கத்தக்கவிதத்தில் ஓர் சம்பவம் நடைபெற்றது. அதாவது இவர் பயின்றுவந்த கல்லூரி ஆசிரியர் இந்திய மாணவர் மனம்கொதிக்கும்படி ஏதேதோ தாறுமாருகவும் இறுமாப்பாகவும் பேசிவிட்டார். அவ்வளவுதான். சுபாஷ் பாபுவின் மனம் தாங்கமுடியாத வருத்தங்கொண்டது. தன் சுயமரியாதையைப் பாதிப்பதுடனில்லாமல் தேசீய கௌரவத்திற்கும் ஹானி ஏற்பட்டதை அறியவே, அவர் மனம் புழுங்கினர். அவரைப்போலவே தேச உணர்ச்சி மிகுந்த

அக்கல்லூரி மாணவர்களுக்கும் மனம் பொறுக்கவில்லை. படிப்பைவிட மானமே பெரிதென எண்ணியவர்களாய் எல்லோரும் ஒரே கட்டுப்பாடாக சுபாஷ் பாபுவின் தலைமையில் கலாசாலையைவிட்டு வெளியேறினர்.

அவருடைய செய்கைக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டும் ஷெ இழிந்த செயலுக்கு உட்பட மறுத்துவிட்டார். அதன்மேல் அக்கலாசாலை அதிகாரிகள் சுபாஷ் போஸை ஷெ கல்லூரியினின்றும் நீக்கிவிட்டனர். அவர்சிறிதுகாலம்வரை பேசாமலிருந்தார். மீண்டும் படிக்கவேண்டும் என்ற அவா எழவே ஸ்காட்டிஷ் சர்ச் கல்லூரியில் பலருடைய நன்முயற்சியால் சேர்த்துக் கொள்ளப்பட்டு பி. ஏ. வகுப்பில் தேர்ச்சியடைந்தார். 1919-ம் ஆண்டில் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். பரீட்சையிலும் தேறினார். கல்வித் தேர்ச்சிக்கு அடையாளமாக கணக்கற்ற பட்டங்களைப் பெற்றார். தமது படிப்பு முடிந்ததும் இந்தியாவுக்குத் திரும்பினார். அப்போது இந்திய அரசியலின் கொந்தளிப்பான நிலைமை அவரது மனம் திடுக்கிடும்படி செய்தது.

ஏனெனில் அக்காலத்தில்தான் மான்டேகும்-செம்ஸ் போர்டும் தயாரித்த அரசியல் சீர்திருத்தமானது இந்தியர்களின் விருப்பத்திற்கு முற்றிலும் மாறாக சுமத்தப்பட்டது. அதைக்கண்டு தீவிர கட்சியினர் மிகவும் அதிருப்தியடைந்தனர். கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடையலாமே என் உதறித் தள்ளவேண்டும் என்பது மிதவாதிகள் அபிப்பராயம். அதிக சீர்திருத்தம் வழங்கவிட்டதாக ஐரோப்

பியர்களின் எண்ணம். அதனால் நாட்டில் கட்சிப் பிளவு உண்டாயிற்று. வாலிபர்கள் மனம் கொதித்தது. மதி பிசகி பயங்கரமான காரியங்களில் ஈடுபடத் தொடங்கினர் கள். அப்போதுதான் ரௌலட் சட்டம் கிளம்பிற்று. புரட் சிக்காரர்கள் எனக் கருதப்பட்டோர் யாதொரு விசாரணை யுமின்றிச் சிறையில் வைக்கப்பட்டனர். நிரபராதிகள்கூட பந்தோபஸ்தில் வைக்கப்பட்டதாக அபிப்பிராயம் தலை யெடுத்தது. இதைக்கண்டு மனம் பொறுமல் வெடிகுண்டு வீச்சுகளும், கொலைகளும் நடைபெற்றன. வாலிபர்களின் மனதைத்திருப்ப காந்தியடிகளின் முயற்சி ஒன்றும் பலிக்க வில்லை. கடைசியாக சத்தியாக்கிரக இயக்கத்தை அனுஷ் டித்தார். தேசமெங்கும் சாந்தமாக ஹர்த்தால் அனுஷ் டிக்கப்பட்டது. அதுசமயம் மகாத்மா காந்தி கைது செய் யப்பட்டார். உடனே வந்தது மோசம். ஜனங்களுக் குள்ளே பெருத்த கொந்தளிப்பு ஏற்பட்டு சில இடங்களில் கலகங்கள் நடந்தன. பஞ்சாபிலே ஜாலியன் வாலாபாக் என்னுமிடத்தில் பொதுக்கூட்டத்தில் கூடும்பொருட்டு ஆயி ரக் கணக்கான மக்கள் வந்துசேர்ந்தார்கள். ஜனங்களுக்கு அங்கு கூட்டங் கூடக்கூடாது என்ற தகவல் தெரியாது. ஜெனரல் டயர் என்பவன் தன் துருப்புகளுடன் தோன்றி நூற்றுக் கணக்கானவர்களைக் கொன்று, ஆயிரக்கணக் கானவர்களைப் படுகாயப்படுத்தினன். விசாரணை காலத்தில் குண்டு தீரும்வரை சுட்டேன் சுட்டேன் என்று வாய்கூசா மல் கூறினன் ஜெனரல் டயர்.

அத்தகைய நிலையில் 1919-ம் வருஷக் கடைசியில் அமிர்தசரஸில் கூடிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில்

தங்களது குறைகள் பரிகரிக்கப்படும்வரை சர்க்காருடன் ஒத்துழைக்கலாகாது என்று தீர்மானித்து, பஞ்சாப் படு கொலையைப்பற்றி விசாரணை செய்ய ஓர் கமிட்டியையும் நிறுவியது. இதற்கிடையில் கிலாபத்துக்கும் ஆபத்து நேர்ந்தது. இஸ்லாமியரின் குரு பீடமான துருக்கி அரசருக்கு ஆங்கில ராஜ தந்திரிகள் வாக்குறுதி செய்தபடி நடந்து கொள்ளாமல் துருக்கியைப் பங்குபோட ஆரம்பிக்கவே முஸ்லீம்கள் மனம் வெகுவாகப் புண்பட்டு கொதித்தெழுந்தனர். 1920-ம் வருஷம் செப்டம்பர் மாதத்திலே லாலா லஜபதிராய் தலைமையில் கல்கத்தாவில் விசேஷ காங்கிரஸ் ஒத்துழையா இயக்கத்தில் இறங்கவேண்டும் எனத் தீர்மானித்தனர். கிலாபத் கட்சியினரும் அதற்கு ஒப்புக்கொண்டனர். ஒத்துழையா இயக்கத்தின் அடிப்படை திட்டங்களான கதர் அபிவிருத்தி, மதுவிலக்கு, தீண்டாமை ஒழித்தல், சட்டசபை, கோர்ட், கலாசாலை முதலிய ஸ்தாபனங்களை பகிஷ்கரித்தல் முதலியவைகளில் விசேஷகவனத்தைச் செலுத்தினர்கள்.

அத்திட்டங்களின்படி சட்டசபைகள் பகிஷ்கரிக்கப் பட்டன. மாணவர்கள் கலாசாலைகளைவிட்டு வெளியேறினர்கள். மிகப்பெரிய தேசியத் தொண்டர் படை திரட்டப் பட்டது. ஒத்துழையா இயக்கம் வலுத்தோங்கியது. திலகர் சுயராஜ்ய நிதி சேகரிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் சிறை புகுந்தனர். சர்க்கார் அடக்கு முறையும் வெகு மும்முரமாயிற்று.

அப்போது இந்திய வைஸ்ராயாக இருந்தவர் லார்ட் ரீடிங். இந்திய மக்களை சமாதானம் செய்யும்பொருட்டு

காணுட்டுக்கோமகனை அழைத்தார். இளவரசர் வருகையை காங்கிரஸ் பகிஷ்கரிக்கத் தீர்மானித்தது. இளவரசர் வருகையில் தேசம் பகிஷ்கரிக்கும் கோலத்துடன் விளங்கக் கூடாதெனக் கருதிய வைஸ்ராய் காந்தியுடன் சமாதானம் பேசினர். அலி சகோதரர்களை விடுவிக்கவேண்டும்; மாகாண சுயாட்சியாவது தரவேண்டும் என்ருர் காந்தியடிகள். அதற்கு வைஸ்ராய் ஒப்பவில்லை. வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு விஜயம்செய்து மனஸ்தாபங்களை மறந்துவிடவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். அவர் வார்த்தை புறக்கணிக்கப்பட்டது. ஒத்துழையா இயக்கம் வலுத்து பெரிய பெரிய தலைவர்கள் எல்லோரும் சிறை புகுந்தனர்.

இச் சம்பவங்களை எல்லாம் சுபாஷ் சந்திரபோஸ் கவனித்து வந்தார். அவர் மனம் உணர்ச்சிப் பெருக்கால் பொங்கியது. தமது ஐ. ஸி. எஸ். பட்டத்தைத் துறந்தார். தமது உத்தியோகத்தையும் ராஜிநாமா செய்தார். தேசீயப் போரில் இறங்கி அஞ்சா நெஞ்சுடன் தேசநிலைமையைப்பற்றி எங்கும் பிரசாரம் செய்தார். அவருடைய பிரசாரத்தால் மக்கள் யாவரும் வீராவேசத்துடன் திரண்டு சிறை புகுந்தனர்.

சுபாஷ் பாபுவின் அபார சேவையைக்கண்ட தேசபந்து பெரிதும் சந்தோஷங்கொண்டவராய் அவரைத்தேசீயத் தொண்டர்படைத் தலைவராக்கினர். சுபாஷ் பாபுவின் தீவிரப் போக்கைக் கண்டஞ்சிய சர்க்கார் அவரைக் கைது செய்து 6-மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தனர்.

இதற்குள் சத்தியாக்கிரக இயக்கம் வலுத்து ஆயிரக் கணக்கான மக்கள் சிறைபுகுந்தனர். கூர்ஜரத்தில் பர்டோலியில் வரிகொடா இயக்கம் ஆரம்பம் செய்தார் காந்தி. ஆனால் மகாத்மா காந்தியின் அஹிம்சா தத்துவத்திற்கு மாறாக ஐக்கிய மாகாணத்தில் கலகம் நடத்தி, போலீஸார்களின் உயிருக்கும் ஆபத்து விளைவித்தபடியால் காந்தி தமது இயக்கத்தை நிறுத்திவிட்டார். மக்கள் திக் பிரமை கொண்டனர்.

சமயத்தை எதிர்பார்த்திருந்த சர்க்கார் காந்தியை உடனே கைது செய்து 6-வருஷ தண்டனை விதித்தது. அதன்மேல் சட்டமறுப்பு பயன்படாதொழிந்தது.





## 2. சேவையும், சிறைவாசமும்.

---

திடாலென்று ஒத்துழையா இயக்கம் நிறுத்தப்பட்டதும் காங்கிரஸ்காரர்களுக்குள் கட்சிப் பிரதிகட்சி ஏற்பட்டது. ஒவ்வொரு சாராரும் ஒவ்வொருவித அபிப்பராயம் தெரிவித்தனர். சட்ட சபைக்குள் புகுந்து அதிகாரவர்க்கத்துடன் சண்டை பிடித்து வெற்றியடைவதுதான் சரியான மார்க்கம் என்றனர் சுயராஜ்யக் கட்சியினர். சட்டசபைப் பிர

வேசம் கூடாது என்றனர் எதிர்க் கட்சியினர். இருந்த போதிலும் தேசம் சுயராஜ்யக் கட்சியினருக்கு ஆதரவு கொடுக்க உத்தேசித்தது. சுயராஜ்யக் கட்சி ஸ்தாபகர்களில் முக்கியமானவர்கள் பண்டித மோதிலால் நேரு, தேசபந்து தாஸர், சுபாஷ் சந்திரபோஸுமேயாகும். சட்டசபை பிரவேசத்துக்கு ஆதரவு கிடைத்ததும் எங்கும் தீவிர தேர்தல் வேலை நடைபெற்றது. அதுசமயம் சுபாஷ் பாபு வங்காளமெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து சுயராஜ்யக் கட்சியினரின் கொள்கைகளைப்பற்றி பிரசாரம் செய்தார். அதன்பயனாக பொது ஜன ஆதரவு அதிகப்பட்டு பெருவாரியான அங்கத்தினர்கள் சட்ட சபைக்குள் சென்றார்கள்.

சுபாஷ் போஸின் தீவிரப் பிரசாரத்தினால் கல்கத்தா நகர சபை காங்கிரஸ் மயமாயிற்று. சுபாஷ் பாபு ஷை நகர சபை காரியஸ்தராக நியமனம் செய்யப்பட்டார். யாவரும் அதிசயிக்கும்படியாக நன்கு நிர்வகித்து வந்தார். காங்கிரஸ்காரர்கள் சட்ட சபைகளைப் பிடித்ததும் சர்க்காரைப் பலவிதங்களிலும் எதிர்த்து திணர அடித்தார்கள். பொதுஜன ஆதரவுபெற்றில்லாத எச்சட்டமும் நிறைவேறாதொழிந்தது. சர்க்கார் தங்கள் விசேஷ அதிகாரத்தைக் கொண்டுதான் ஷை சட்டங்களை நிறைவேற்றும்படி நேர்ந்தது. இவர்களுடைய எதிர்ப்பைத் தாங்கமாட்டாமல், காங்கிரஸ்காரர்களை ஒடுக்கவேண்டும் என்ற எண்ணங்கொண்டு சர்க்கார் இந்திய பாதுகாப்புச் சட்டம் என்ற வங்காள அவசரச் சட்டத்தைப் பிறப்பித்தார். அச்சட்

டத்தின் மூலம் சுபாஷ் பாபுபோன்ற பல காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்யப்பட்டு சிறைவாசம் செய்யும்படியாக ஆயிற்று.

இச்சிறை வாழ்க்கையிலிருந்து சுபாஷ் போஸின் உடல் நிலை பெரிதும் பாதிக்கப்பட்டுவிட்டது. காச நோய் வேறு அவரைப்பற்றி மிகவும் துர்ப்பலமாக்கிற்று. அவர் பல சிறைகளுக்குமாக மாற்றப்பட்டு முடிவில் மாந்தலே சிறைக்கு மாற்றப்பட்டார். அங்கு அவரது உடல் நிலை மிகவும்மோசமாகி படுத்த படுக்கையாய்விட்டார். அவரது சகோதரரான சுநீல சந்திரபோஸ் சுபாஷின் உடல் நிலையைப்பரிசோதித்துப் பார்த்து, ரொம்பவும் மோசமாயிருப்பதை அறிந்து தம் சகோதரரை வெளிநாட்டுக்கு அனுப்ப வேண்டுமெனச் சர்க்காரைக் கேட்டுக்கொண்டார். சர்க்கார் தாம் அவரை ஐரோப்பாவுக்குச் செல்ல அனுமதிப்பதாகவும், ஆனால் பிரயாணத்தின்போது கல்கத்தாபோன்ற இடங்களில் இறங்காமல் போகவேண்டும் என்ற நிபந்தனை விதிக்கப்பட்டது. சுபாஷ் தான் ஷை சிறையிலேயே இறந்தபோதிலும் சரி, எவ்வித நிபந்தனைகளுக்கும் உட்பட முடியாது என்று கண்டிப்பாகக் கூறினர். 1927-ஹு எப்ரல் மாதத்தில் அவர் படுத்த படுக்கையாய்ப் போய் விடவே சர்க்கார் சுபாஷ் போஸை இன்சீன் சிறைக்கு மாற்றினர்கள்.

சுபாஷ் பாபுவின் உடல் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டே வந்தது. ஜனங்களுக்கு அதிருப்தியுணர்ச்சி பெருகிக்கொண்டே வந்தது. கடைசியாக சர்க்கார்

---

சுபாஷை ஐரோப்பாவுக்குச் செல்ல அனுமதித்தார்கள். உடனே பர்மாவினின்று கப்பல் புறப்பட்டது. 1927-ஆு மே-மாதம் 15-ந்தேதியன்று ஷெ கப்பலானது கல்கத்தா துறைமுகத்தை வந்தடைந்தது.

என்ன நேர்ந்தபோதிலும் சரி. தாம் எப்படியும் கல்கத்தாவில் இறங்காமல் போவதில்லையென்று ஏற்கனவே சுபாஷ் சந்திரபோஸ் ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தாராதலின் ஆயிரக்கணக்கான வங்க மக்கள் அவரைத் தரிசிக்கும்பொருட்டு கடற்கரைக்கு விஜயம் செய்திருந்தார்கள். கப்பல் கல்கத்தா துறைமுகத்தை வந்தடைந்ததும் பாபு சுபாஷை அவரது சகோதரர் சரத்சந்திரபோஸ் கப்பலுக்குட்சென்று பார்த்தார். ஸர் நீலரத்தின சர்க்கார், மேஜர் ஹிங்ஸ்டன், பி. வி. ராய் முதலியோர் சுபாஷின் உடல் நிலையைச் சோதித்துப் பார்த்தனர். அவர் மிக்க பலஹீனமுற்று சோர்ந்த நிலைமையிலிருந்தார்.

வங்க மக்களின் மனவெழுச்சியையும், சுபாஷின் உடல் நலிவையுங்கண்ட சர்க்கார் அவரை விடுவித்துவிடும்படி உத்திரவு போட்டனர். சுபாஷ் விடுவிக்கப்பட்டார் என்ற செய்தி காட்டுத்தீபோல் எங்கும் பரவிற்று. எங்கும் ஒரே ஆரவாரம். சந்தோஷ வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்த வண்ணமாக இருந்தன. திரேகம் சௌக்கியமடையும்வரை எந்த சேவையிலும் ஈடுபட முடியாதவராய் சில மாதகாலம் வரை சிகிச்சையிலிருந்தார். பூர்ண குணமடைந்ததும் மீண்டும் அரசியலில் ஈடுபட்டு வங்காள மாகாணக் கமிட்டித் தலைவரானார்.

1928-ம் வருஷம் பிப்ரவரி மாதம் சைமன் கமிஷன் பம்பாய் வந்திறங்கியதும், தேசத்தில் ஷெ கமிஷன் பகிஷ்காரம் வெகு மும்முரமாயிற்று. அக்கமிஷன் சென்றவிடமெல்லாம் கருப்புக்கொடி ஊர்வலமும், சைமனே திரும்பிப் போ என்ற ஆரவாரமுந்தான். அச்சமயத்தில் பாஞ்சால சிங்கம் லாலா லஜபதிராயும் இதர தலைவர்களும் தடியடிபட்டதும், அதன் காரணத்தினலேயே லஜபதி இறந்ததும் யாவரும் அறிந்த விஷயம். அப்போது லார்ட் பர்க்கன் ஹெட் இந்தியா மந்திரி. இந்தியர்கள் ஓர் அரசியலைத் தயாரித்துக்கொடுத்தால் ஆலோசிப்பதாக அவர் கூறினர். அதன்படியே 1928-ம் வருஷம் டிசம்பர் மாதம் பண்டித மோதிலால் நேரு தலைமையில் கல்கத்தா காங்கிரஸ் மகாசபை கூடிற்று. அப்போது நேரு திட்டம் சபைக்குக் கொண்டுவரப்பட்டது. அக்கூட்டத்தில் சுபாஷ் சந்திர போஸ் "இந்தியர்களுக்கு பரிபூர்ண சுயராஜ்யந்தான் வேண்டும். மற்ற எந்த அரசியலும் பிரயோஜனமில்லை" என்று ஓர் திருத்தம் கொண்டுவந்தார். அத்திருத்தத்தை ஜவஹர்லால் ஆமோதித்துப் பேசினர். இருந்தும் அத்திருத்தம் தோல்வியுற்றது. காரணம் ஒரு வருஷம் வரை பொறுத்துப் பார்ப்பதென்றும், அதற்குள் குடியேற்ற நாட்டந்தஸ்து வழங்கப்படாவிடில் பரிபூர்ண சுயராஜ்யக் கொடியைத் தூக்கிவிடுவது என்று தீர்மானித்ததினல்தான். ஷெ தீர்மானம் நிறைவேற முக்கிய காரணஸ்தர் மகாத்மா காந்தியடிகள்தான்.

அக்கூட்டத்திற்குப் பிறகு சுபாஷ் சந்திரபோஸ் செய்த தீவிரப் பிரசாரவேலைகள் அல்பசொல்பமானதல்ல.

நூற்றுக் கணக்கான பொதுக் கூட்டங்களில் பேசி மக்களைத் தயார் படுத்தினர். அவருடைய உத்வேகத்தையும், செல்வாக்கையுங்கண்ட அரசாங்கம் பெரிதும் அஞ்சி அவர் மேல் பலவிதமான வழக்குகளைத் தொடர்ந்து வந்தது.

1929-ம் வருஷம் டிசம்பர் மாதம் லாகூரில் ஜவஹர் லால் நேரு தலைமையில் காங்கிரஸ் மகா சபை கூடிற்று. அதுசமயம் சுபாஷ் சந்திரபோஸ் பேசுகையில், சென்ற வருஷம் தீர்மானித்தபடி குடியேற்ற நாட்டந்தஸ்துகூட கிடைப்பதற்கு வழியில்லாமலிருக்கிறபடியால், வாலிபர்களின் தீவிர உணர்ச்சிப் பிரகாரம் பரிபூர்ண சுயராஜ்யக் கொடி தூக்கவேண்டுமென வற்புறுத்தினர். பூர்ண சுயராஜ்யத் தீர்மானம் நிறைவேறியது. புது வருஷம் பிறந்ததும் ஜவஹர்லால் நேரு லாகூர் காங்கிரஸில் பூர்ண சுயராஜ்யக் கொடியை உயர்த்தினர்.

1930-ம் வருஷம் ஜனவரி மாதம் 30-தேதி வங்காளமெங்கும் பூர்ண சுயேச்சை தினம் கொண்டாடப்பட்டது. ஆனல் அக்காலத்தில் ஏற்கனவே ராஜத்துவேஷக் குற்றத்திற்காக ஒரு வருஷ தண்டனை விதிக்கப்பட்டிருந்த சுபாஷ் பாபு ஷை சுயேச்சைக் கொண்டாட்ட தினத்தில் சிறைச்சாலையில் தேசியக்கொடியை ஏற்றி திருவிழா கொண்டாடினர்கள். பார்த்தார்கள் சர்க்கார். இவர்களுக்குச் சிறைச்சாலையில் எப்படி கொடி கிடைத்தது என்பதை அறியமுடியாமல் தவித்தார்கள். அதுவிஷயமாக செய்த விசாரணையும் பயன்படவில்லை. அதே க்ஷாத்திரத்தால் சிறைக்கூடத்தில் நடந்த சிறு சச்சரவில் சுபாஷ்போஸ் சிறை

அதிகாரிகளால் மிருகத்தனமாக அடிக்கப்பட்டார். மணிக் கட்டில் நரம்பு பிசகி குணமாக வெகு காலமாயிற்று.

இது நிற்க, காங்கிரஸ் தலைவர்கள் மேற்கொண்டு என்ன செய்வதென இரண்டு மாத காலங்கள் ஆழ்ந்த சிந்தனையிலிருந்தார்கள். முடிவில் உப்பு சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்போவதாக லார்டு இர்வினுக்கு அறிவித்தார் மகாத்மா காந்தி. மார்ச் மாதம் 12-ந்தேதி மகாத்மா காந்தி தண்டி என்னும் உப்பளத்திற்கு சத்தியாக்கிரகத்தின் நிமித்தம் சபர்மதி ஆசிரமத்திலிருந்து கால் நடையாகப் புறப்பட்டார். தேசமெங்கும் கூட்டங்கள் கூடி லட்சக்கணக்கான மக்கள் உப்பு சத்தியாக்கிரகம் செய்தனர். மகாத்மா காந்தி மே மாதம் 5-ந்தேதியன்று கைது செய்யப்பட்டார். அடக்கு முறைகள் ஓங்கின. எங்கும் அவசரச் சட்டங்களும் ராணுவச் சட்டமும் அமுலுக்கு வந்தன. சுமார் லட்சம் பேருக்குமேல் சிறைக்களம் புகுந்தனர். நூற்றுக்கணக்கில் இறந்து, ஆயிரக் கணக்கில் படுகாயமடைந்தனர்.

இச்சந்தர்ப்பத்தில் சுபாஷ் போஸ் தமது தண்டனை காலம் பூர்த்தியாகி விடுதலையடைந்தார். விடுதலையான அன்றே சத்தியாக்கிரக இயக்கத்தில் வீராவேசத்துடன் கலந்துகொண்டார். சர்க்காரின் தடை உத்திரவை அவர் மதிக்காமல் சட்டங்களை மீறினார். உடனே அவர் சிறைபடுத்தப்பட்டு ஒருவார சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டார். அத்தண்டனை முடிந்து வெளிவந்ததும் மீண்டும் சிறைபடுத்தப்பட்டார்.

1931-ம் வருஷம் ஜனவரி-ீ 25-ந்தேதி மகாத்மா காந்தி விடுவிக்கப்பட்டார். காந்திக்கும், லார்டு இர்வினுக்கும் மகத்தான ஒரு ஒப்பந்தம் எற்பட்டது. அதன் பயனாக உப்புப் போர் நிறுத்தப்பட்டு சுபாஷ் சந்திரபோஸ் போன்ற இதர தலைவர்களும் விடுவிக்கப்பட்டனர். அச் சமாதான ஒப்பந்தம் சுபாஷுக்கு திருப்தியை யளிக்கவில்லை. காரணம் புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டதினால் தூக்கிலிடப்பட்ட பகத் சிங், ராஜகுரு, சுகதேவ் போன்ற வாலிபர்களுக்கு இயாதொரு நன்மையும் செய்யாததினால் தான். அதுபற்றிப் பல இடங்களில் குறிப்பிட்டுப் பேசினார்.

1931-ஆ மார்ச்சு மாதம் கராச்சியிலே ஸர்தார் வல்லபாய் படேல் தலைமையில் காங்கிரஸ் மகாசபைக்கூட்டம் கூடியது. அச்சபை மகாத்மா காந்தியை காங்கிரஸின் ஏகப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தது. மகாத்மா காந்தி வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்று காங்கிரஸ் கோரிக்கைகளை எடுத்து நன்கு விளக்கிக் காட்டினார். சக்கரவர்த்தியாரும் காந்தியுடன் சம்பாஷித்தனர். ஆனால் பயன் ஒன்றும் எற்படவில்லை. இந்தியாவில் அதற்குள் லார்ட் வெல்லிங்டன் வைசிராயாக வந்தார். ஒப்பந்தத்திற்கு முற்றிலும் விரோதமாகப் பல காரியங்கள் நடைபெற்றன. அதனால் பல தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். 1932-ஆ ஜனவரியில் மகாத்மா காந்தியும் கைதுசெய்யப் பட்டார். இச்சந்தர்ப்பத்தில் எங்கேயாவது சுபாஷ் போஸை சர்க்கார் பேசாமல் விட்டுவைத்திருப்பார்களா? அவரைக் கைதுசெய்து பந்தோபஸ்துக் கைதியாக வைத்

திருந்தனர். சிறைவாசம் ஒத்துக்கொள்ளாமல் மீண்டும் காசநோய் தலைகாட்டிற்று. அவரை சென்னை சிறைச் சாலைக்குக் கொண்டுசென்று பரீக்ஷை செய்து பார்க்கப் பட்டது. வைத்திய நிபுணர்களான பி. ஸி. ராயும், நீல ரத்தின சர்க்காரும் அவருடைய அபாய நிலைமையைக்கண்டு ஐரோப்பாவுக்கு அனுப்பும்படி சர்க்காரைக் கேட்டுக் கொண்டனர். சர்க்கார் அனுமதியின்மேல் வியன்னு போய்ச்சேர்ந்தார். சத்திர சிகிச்சை செய்யப்பட்டது. அதே சமயம் இந்திய சட்டசபைத் தலைவராக இருந்த வல்லபாய் படேலும் உடல் நலங் குன்றி சிகிச்சையினிமித் தம் அங்கு விஜயம் செய்திருந்தார்.

சுபாஷ் சந்திரபோஸ் வல்லபாய் படேல் நோயுற்றிரு ந்த காலத்தில் செய்த உதவியானது சொப்பத்தரமன்று. எவ்வளவோ சிகிச்சை செய்தும் பயன்படாமல் வல்லபாய் படேல் காலஞ்சென்றார். வல்லபாய் படேல் சாகும் முன் சுபாஷுக்கு இந்தியா சுயராஜ்யம் பெற எம்மாதிரியான முறைகளை அனுஷ்டிக்கவேண்டும் என்பதுபோன்ற பல விஷயங்களை உள்ளன்போடு விளக்கிக் கூறினர். அவர் இறக்குந் தருவாயில் இந்திய நிலைமையைப்பற்றி வெளி நாட்டில் பிரசாரம் செய்யும்பொருட்டு ஒரு பெருந் தொகையை சுபாஷ் பேரில் உயில் எழுதிவைத்தார். வல்ல பாய் படேல் இறந்ததை சுபாஷின் இளகிய மனம் தாங்க வில்லை. அவரது சடலத்தை பம்பாய்க்கு அனுப்பினர். இச்சமயத்தில் அவரது தந்தையின் உடல் நிலையின் அபா யத்தை அறிந்தவராய் 1934-ம் வருஷக் கடைசியில் இந்

இனாம்! " டேபிள் டைம்பீஸ் " இனாம்!!



எங்கள் 22 காரட் தங்க நிறமுள்ள 'கோல்டன்' அல்லது உயர்ந்த இரட்டை குரோம் கேஸ் உள்ள சரியான நேரத்தைக்காட்டும் அழகிய கை கடிகாரம் வாங்குபவருக்கு உயர்ந்த ஜர்மன் டையம்பீஸ் ஒன்றுஇனாமாக அனுப்பப்படும். இரண்டுகடிகாரத்திற்கும் 5-வருஷ உத்திரவாதம் கொடுக்கப்படும். மேற்கண்ட

☞ இரண்டுகடிகாரங்கள் விலை ரூ 6—12—0 ஏக காலத்தில் 3-செட்டுக்கு ஆர்டர் செய்தால் 1-லீவர் கைகடிகாரம்சேர்த்து அனுப்பப்படும்.

**T. R. P. Sarathy & Co., Robertsonpet N(K. G. F)**

---

குணமில்லை என்று நிரூபிப்பவர்களுக்கு ரூ. 100 இனாம்.

## மதன கோலாகல ரசமணி மாத்திரை.

பலஹீனம், தாது நஷ்டம், விந்து உடைச்சல், நீற்றல் சொர்ப்பன, துரித ஸ்கலிதம், நரம்பு தளர்ச்சி, ஆண் குறி துவளல், ஞாபகசக்தி, தைரிய வீரியக் குறைவு, பலஹீனம் முதலியவைகளை நீக்கி வீரம், வன்மை, தைரியம், உற்சாகம், சக்தி எல்லாம் கூடும். வேறு கிடைப்பதரிது.

96-மாத்திரை புட்டிக்கு ரூ 5. 48-மாத்கரைக்கு ரூ 3

24-மாத்திரைக்கு ரூ 1½ (வி. பி. சார்ஜ் வேறு)

ராஜ சித்த வைத்திய சாலை,
செவ்வாய்ப்பேட்டை, சேலம்.

---

அசல் 5 வருஷம் ரோல்டு கோல்டு கெம்புகள் பதித்த

☞ லீவர் கை கெடிகாரம்.



நெ. 622 தங்கநிறம் என்றும் மங்காது. 5-வருஷம் உத்திர வாதம். ஜூவல்ஸ் உள்ளது. வெகு சிறிய அளவு. காலத்தைச் சரியாககாட்டும். விலை ரூ 8—12—0 கோல்டுபிளேட் நெ. 6 ரூ. 5-10-0 குரோமியம் கேஸ் நெ. 88, விலை ரூ 4—12—0

பிரதி கடிகாரத்திற்கு 18 Kt. ஸ்பிரிங் செயின் இனாமாக அனுப்பப்படும். ஒவ்வொரு கெடிகாரத்திற்கும் உத்திரவாத பத்திரம் அனுப்பப்படும்.

வெஸ்ட் வார்டு வாட்ச் கம்பெனி,
கடிகார ஏஜண்டுகள், உரிகம். (K. G. F.)

நியா வந்து சேர்ந்தார். ஆனால் இவர் வருவதற்குமுன் இவர் தந்தை இறந்தது கேட்டுப் பெருந் துயரடைந்தார்.

தந்தைக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் செய்தார். இதற்குள் இவருக்குப் பழையபடியே நோய் அதிகரிக்கலாயிற்று. சர்க்காரின் அனுமதிப் பிரகாரம் மீண்டும் ஐரோப்பாவுக்கே பிரயாணமானார்.



## 3. வெளிநாட்டில் பிரசாரம்.



கப்பல் பிரயாணத்தின் சமயத்தில் எகிப்தில் நஹாஸ் பாக்ஷாவைக் கண்டு பேசினார் சுபாஷ் போஸ். வியன்னா போய்ச் சேர்ந்ததும் ஷ வியாதி சீக்கிரத்தில் குணமாகவில்லை. பூர்ண குணமடைய வெகுகாலஞ் சென்றது. வெளிநாட்டில் தங்கியிருக்கையில் இவர் இந்தியாவுக்குச் செய்த சேவைகள் அநந்தம். முஸோலினியைப் பார்த்துப் பேசினார். ஒவ்வொரு ராஜீயக் கொள்கைகளைப் பற்றியும் அலசிப் பார்த்ததில் சோஷலிஸக் கொள்கைகள்தான் அவருக்குப் பிடித்தது. அயர்லந்துக்கு விஜயம் செய்து திவேலராவுடன் சம்பாஷித்தார். பிறகு நோபல் பரிசு பெற்றவரும் உலக மகான்களில். ஒருவருமான ரோமன்ரோலந்தைப் போய்ப்

பார்த்தார். அப்போது இந்தியாவின் தற்கால நிலைமையைப்பற்றி எடுத்துக்கூறி ஷெயாரின் அபிப்பிராயங்களை அறிந்துகொண்டார்.

ஆங்கில நாட்டில் மிஸ். மேயோ போன்றவர்கள் இந்தியர்களின் பழக்க வழக்கங்களைப்பற்றிக் கண்டபடி தூஷித்துப் பரிகாசம் செய்துவந்தார்கள். ஆங்கில மக்கள் அவர்களுடைய பொய்ப் பிரசாரத்தினால் இந்தியாவின் உண்மை நிலைமையைப்பற்றி நன்கு அறிந்துகொள்ளமுடியவில்லை. அவரதுஇடைவிடா பிரசாரத்தால் ஆங்கில மக்கள் இந்திய நிலைமைபற்றி ஒருவாறு அறிந்துகொள்ள முடிந்தது என்றே சொல்லலாம்.

கடைசியாக 1936-ம் வருஷம் மார்ச் மாதம் இந்தியாவுக்குத் திரும்பினர். இவர் வருகையைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் குதூகலத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். பம்பாய் போலீஸ் இலாகாதாரும் சுபாஷைக் கைது செய்ய விசேஷ போலீஸ் ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தார்கள். கப்பல் பம்பாயை அடைந்ததும் போலீஸ் அதிகாரி சுபாஷ் பம்பாயில் இறங்கினல் கைது செய்யப்படுவாரென்றும், கொழும்புபோன்ற இடங்களுக்குச் சென்ருல் கைது செய்யப்படமாட்டாரென்றும் கூறினர்.

“நான் பம்பாயில்தான் இறங்குவேன். என்னைக் கைது செய்வதைப்பற்றி அக்கரையில்லை” என்று கூறியபடி பம்பாயில் இறங்கினர். மக்கள் ஆயிரக்கணக்காக

வித்து அவரைத் தரிசித்தனர். 'ஜே' கோஷம் வானைப் பிளந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் 1818-ம் வருஷ ரெகுலேஷன் ஆக்டுபடி கைது செய்யப்பட்டார்.

அவர் கைது செய்யப்பட்டதும் தேசமெங்கும் கொந்தளிப்பு எற்பட்டது. எங்கும் கண்டனத் தீர்மானங்கள். சுபாஷ் கைது செய்யப்பட்ட சமயம் பெய்ஸ்பூரில் காங்கிரஸ் நடைபெற்றது. அதுசமயம் ஜவஹர்லால் நேரு மே-மாதம் 10-ம் தேதியை சுபாஷ் தினமாகக் கொண்டாட வேண்டுமென தேசத்தாருக்குக் கட்டளையிட்டார். அதன் படி தேசமெங்கும் ஜனங்கள் கூடி சர்க்காரின் நடத்தையைக் கண்டித்தார்கள். சுபாஷை சிறை வைத்தது சரியா வென விவாதிக்கும்பொருட்டு இந்திய சட்ட சபையும் கூட்டத்தை ஒத்திவைத்தது. ஆனால் 1937-ஆ மார்ச் மீ 17-ம் தேதி இயாதொரு நிபந்தனையுமின்றி சுபாஷ் போஸை விடுதலை செய்தனர் அரசாங்கத்தார். தளரா மன உணர்ச்சி பெற்ற பாபு சுபாஷ் சந்திரபோஸ் விடுதலை செய்யப்பெற்றதும் மீண்டும் தேசிய வேலையில் வெகுவாக ஈடுபட்டுழைத்தார். சென்குப்தாவுக்கும், சுபாஷ் பாபுவுக்கும் எற்பட்ட தகராறினால் வங்காள காங்கிரஸ் கட்சிக்குள் பிளவு எற்பட்டிருந்தது. அப்பிளவை ஒழிக்கும் வகையில் பல சீர்திருத்தங்களைச் செய்தார்.

சுபாஷ் போஸ் நோயாயிருக்கும் காலத்திலிருந்தே மகாத்மா காந்தியடிகளுக்கு சுபாஷைக் காணவேண்டும் என்ற அவா உண்டு. சிறைவாசத்தாலும், தேசப் பிரஷ்டத்தினாலும் அதற்குத் தருணம் வாய்க்காமலிருந்தது.

தற்போது விடுதலையானதும் சுபாஷ் பாபு மகாத்மாவை ஆனந்தபவனத்தில் சந்தித்தார். காந்தியடிகள் அவரை அன்புடன் தழுவி அவரது தேரேக நிலையைச்செவ்வையாகக் கவனித்துக்கொள்ளவேண்டுமெனக் கூறினார்.

காங்கிரஸ் தலைவர்கள் மந்திரி பதவி ஏற்றுக்கொண்டதைப்பற்றி மகாத்மாவிடம் பேசினார். காங்கிரஸ் மந்திரிகள் மிக்க உறுதியான மனம் படைத்தவராகவும், காங்கிரஸ் கொள்கைகளைப் புறக்கணிக்காதவராகயும் இருக்கவேண்டுமெனத் தம் அபிப்பராயத்தைக் கூறினார். வெகு காலமாக மகாத்மாவின் அஹிம்சா இயக்கத்தில் நம்பிக்கையற்றிருந்த சுபாஷ் பாபுவுக்கு மகாத்மாவின் அருஞ்செயல்களால் நேர்ந்த மகத்தான மாறுதல்களைக் குறித்து சந்தோஷமடைந்தார்.

தற்போது காங்கிரஸ் மந்திரிகள் எழு மாகாணங்களில் ஆட்சி புரிவதையும், அவர்களால் மக்களுக்கு செய்யப்படும் சீர்திருத்தங்களைப்பற்றியும் மிகவும் சந்தோஷ பூரிதராய் கவனித்து வருகிறார்.

காங்கிரஸ் ஆட்சியால் மக்களுக்கு அரசாங்கத்தைப் பற்றிய பயம் போய்விட்டதையும், அரசியல் கைதிகளும், பந்தோபஸ்துக் கைதிகளும் விடுவிக்கப்பட்டு, சந்தோஷத்துடன் வீடு வந்து சேர்வதையும், தாய்நாட்டுக்கு நாமாவது போகப்போவதாவது என்று நம்பிக்கையற்றிருந்த அந்தமான் கைதிகள் காங்கிரஸ் ஆட்சியால் நமக்கு நல்ல காலம் வந்தது என்று மனதார சந்தோஷப்

பட்டுக்கொண்டே இல்லம் திரும்புவதையும், காங்கிரஸ் மந்திரிகள் சொல்ப சம்பளம் பெற்று கிராமங் கிராமமாகச் சென்று ஏழைகளுடன் பழகி அவர்களுடைய கஷ்ட நிஷ்டூரங்களை அறிந்து, அதற்குத் தக்கபடி நடந்துவரும் மனப்பான்மையையும் சுபாஷ் போஸ் கவனித்துக் கொண்டே வருகிறார்.

குடியினால் நாட்டுமக்கள் நாசமடைவதைக் குறித்து வருந்தி, அரசாங்க வருமானம் போனபோதிலும் சரி மக்கள் சுபிட்சத்துடன் வாழவேண்டுமென மதுவிலக்குத்திட்டம் ஆரம்பத்திருப்பதையும், விவசாயிகளுக்கு விதிக்கப் பட்டிருந்த அபார வரியில் தள்ளுபடிசெய்தும், அவர்களை அழுத்திக்கொண்டிருக்கும் கடன்பளுவைக் குறைக்க எடுத்துக்கொண்டிருக்கும் முயற்சியையும் அவர் அறியாமலில்லை. காங்கிரஸ் ஆட்சியின்பயனாக கணக்கற்ற நன்மைகள் தேசத்திற்குசெய்ய முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டதோடு மகாத்மாவின் ஆற்றலைக்கண்டு மகிழ்கிறார்.

அந்தமான் கைதிகள் உண்ணாவிரதம் அனுஷ்டிப்பது என்ற மிரட்டுதலைச் செய்வதால் அவர்களுக்கு விட்டுக் கொடுக்கக்கூடாது என்பது ராஜப்பிரதிநிதியின் எண்ணம். ஆனால் சுபாஷ்போஸ் பலவீனமான அரசாங்கந்தான் நியாயமாக நடக்கப்பயப்படுமேயொழிய, பெருந்தனத்துடன் நடப்பதால் அரசாங்கத்துக்கு எவ்வித இழிவும் ஏற்படாது என்றும் சர்க்கார் தற்போது விட்டுக்கொடுப்பது உண்ணாவிரதிகளுக்கென ஆகாவென்றும் பொதுமக்களுக்காகச் செய்ததுபோலத்தான் ஆகுமென்றும் வாதித்தார்.

1937-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் கல்கத்தாவில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிகூடியது. அதைச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்தவர் சுபாஷ்சந்திர போஸ்தான். அவருடைய நிர்வாகத்திறமையால்தான் அவ்வளவு ஒழுங்காக ஏற்பாடு செய்யமுடிந்தது. அதிலிருந்து அவர் தேசமக்களின் மனதை எவ்வாறு கொள்ளை கொண்டிருக்கிறார் என்பதைவிளக்க போதிய சான்றாகும். அவருடைய செயல்களால் வங்க மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குள் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையுமுண்டாக்கினர். வங்க மாகாணத்தை முன்னணிக்குக்கொண்டுவர முயற்சிகள் செய்தார்.

---

## 4 லண்டன் விஜயம்.

---



கல்கத்தா நகர சபை நிர்வாகத்தில் இவர் கொண்டிருந்தபற்றும் ஆற்றியதொண்டும் செப்பத்தரமன்று, மேலும் இவர் வங்கமாகாணத்தை முன்னணிக்குக்கொண்டுவர பல அரிய முயற்சிகள் செய்தார். நவம்பர் மாதம் 10-ந்தேதி சுபாஷ் சந்திரபோஸ் கல்கத்தா நகரசபையில் ஓர் அல்டர் மனாகத்தேர்ந்தெடுக்கப்பட்டார். அதினின்று இவர்சேவை பன்மடங்கு அதிகமாயிற்று.

மகாத்மா காந்தியைப்பற்றி இவர் கொண்டுள்ள உன்னதமான அபிப்பிராயம் ஒரு பத்திரிகை நிருபருக்கு இவர் கூறியதிலிருந்தே நன்கு விளங்கும். அதாவது "மகாத்மா காந்தியால்தான் இந்தியா என ஒரு தேசமிருக்கிறது என்பதையறிய முடிந்ததுடன் இந்தியர்களின் விடுதலைப்போர் மிக முக்கியமான உலக பிரச்சனை யென்பதை அன்னிய தேசத்தினர் அறியமுடிந்தது" என்று இவர் கூறியதிலிருந்தே விளங்கும். சித்தானந்தா பார்க்கில் கூடிய பொதுக் கூட்டத்தில் இவர் பேசியதிலிருந்து இவர் தொழிலாளர் பால் கொண்டுள்ள மனோபாவத்தை நன்கு அறிந்துகொள்ளலாம். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையில் பெரிதும் ஆர்வமுள்ளவர், வகுப்பு வாதத்தை அறவே வெறுப்பவர். காங்கிரஸ் ஸ்தாபனம் ஒன்றுதான் முதலாளி தொழிலாளி என்னும் வேறுபாடில்லாமல் வகுப்பு வித்தியாசமில்லாமல் சகலருக்கும் சம உரிமையும், சம அந்தஸ்துமளித்து நன்மை விளைவிக்கும் ஓர் மகத்தான ஸ்தாபனம் என்பதை அறிவுறுட்டிவந்தார்.

இம்மாதிரியாக பல விதங்களிலும் மக்கட்கு சேவை செய்து வருகையில், இவரது உடல் நலம் மீண்டும் குன்றி, நோய்வாய்ப்பட்டார். தமது தேகத்தை சுகப்படுத்திக் கொள்ளும்பொருட்டு நவம்பர் மாதம் 18-ந்தேதி ஐரோப்பாவுக்குப் பயணமானார். டாக்டர்களைக் கலந்து பேசி உடல் சிறிது தேறியவுடன் ஜனவரி மாதத்தில் இங்கிலாந்துக்குச் சென்றார். அங்கு காங்கிரஸ் மந்திரிகளின் நிலைமை பற்றியும், சமஷ்டிபற்றி இந்தியர்கள் கொண்டுள்ள மனோ

பாவத்தைப்பற்றியும் எடுத்துக்கூறினர். ஏராளமான மக்கள் விஜயம் செய்திருந்தனர்.

மேலும் சுபாஷ் சந்திரபோஸ் தொழிற்கட்சி பிரமுகர்களான ஸ்ரீ அட்லி, லார்ட் லின்னேல், லார்டு ஸ்னெல் முதலியோருடன் பேசினர். இந்தியா லீக் ஆதரவில் பேசுகையில் இந்தியர்களுக்கு தொழிற்கட்சியிடமிருந்த நம்பிக்கை போய்விட்டதென்று கூறினர். மற்றும் ஹிந்து முஸ்லீம் வர்த்தகர்கள் கூட்டத்திலும், ஸெண்ட் பாங்கிராஸ் டவுன் ஹாலில் நடந்த கூட்டங்களிலும் இந்தியர்களின் எதிர்காலம்பற்றியும் இந்தியர்களின் வெற்றி நிச்சயம் என்றும் பேசினர்.

ஜனவரி மாதம் 12-ந்தேதி டிவேலராவை மீண்டும் கண்டு இந்திய அரசியல் போராட்டத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களைப்பற்றி விரிவாகக் கூறினர். சுபாஷ் பாபு பேசிய எல்லாக் கூட்டங்களிலும் பெரியதுகான்வே ஹாலில் நடைபெற்ற கூட்டமாகும். மிஸ்டர் ஜார்ஜ் லான்ஸ்பரி அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். அதுசமயம் ஹரிபுரா காங்கிரஸ் மகாசபைக்கு இயாதொரு எதிர்ப்புமின்றித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற செய்தி சுபாஷ் பாபுவிடம் கூறப்பட்டது. இவ்விஷயத்தை அறிவித்த ராய்ட்டர் பிரதிநிதியிடம் சுபாஷ் சந்திரர்' நான் அஸ்தானத்திற்குத் தகுதியுடையவன் என்று நினைக்கத்தக்க அகந்தையுடையவன் அல்ல. தேசப்பணியில் மிக்க தியாகம் செய்துள்ள வாலிபர்களுக்கு அளிக்கப்பட்ட ஓர் சந்தர்ப்பமாகவே நினைக்கின்றேன். எல்லோரும் ஒருமுகமாக தேசப்போரில் இற

ங்க வேண்டும். இந்திய பிரச்னை ஓர் உலகப் பிரச்னையே யாகும். என்றால் இயன்றவரையில் என் நாட்டுக்கு உழைக்க முற்படுவேன்'' என்று கூறினர்.

சுபாஷ் சந்திரபோஸ் ஷ தலைமைப் பதவிக்கு முற்றிலும் தகுந்தவர் என்று ஏகமனதாக பல இந்திய பத்திரிகைகள் எழுதின. ஜனவரி-மீ 19-தேதி சுபாஷ் சந்திரபோஸ் இந்தியாவுக்குக் கிளம்பினர். கராச்சிக்கு விஜயம் செய்ததும் மகோன்னதமான வரவேற்பளிக்கப்பட்டது. எங்கும் ஒரே ஜனக்கூட்டம். சுதந்தரப் போராட்டத்தில் எல்லோரும் சேர்ந்து வரவேண்டுமென வேண்டினர். பிறகு கல்கத்தாவிற்குச் சென்று தம் சுற்றத்தார்களைக் கண்டு பேசினர்.

## 5. சுபாஷின் குணாதிசயங்கள்.



சுபாஷ் சந்திரபோஸ் தேசப் பணியில் கலந்து சுமார் 17-வருஷங்களேயாயினும் இவர் பெரும்பாலான காலமெல்லாம் தேசப் பிரஷ்டம், சிறை வாழ்வு, கொடிய காசநோய் முதலியவைகளால் பெரிதும் துன்பம் அனுபவித்து வந்தார் என்றே சொல்ல வேண்டும். தியாகத்தின் உருவென்றே இவரைக் கூற வேண்டும் இவர் அரசியலில் கலந்தகாலத்தில் வட வங்காளத்தில் தோன்றின பெருவெள்ளத்தால் மிகுந்த ஜனசேதமும், பொருட்சேதமும் உண்டாயிற்று. அப்போது உண்டான

பஞ்சத்தால் மக்கள் அநுபவித்த துன்பம் சொல்லத்தர மல்ல. அதுசமயம் வங்காள நிவாரணக் கமிட்டியின் காரிய தரிசியாய் இருந்து இவர் இராப்பகலாய் செய்த தியாகம் கொஞ்சநஞ்சமல்ல.

இவர் பத்திரிகைத் தொழிலிலும் வல்லவர். சித்தரஞ்சனரால் ஆரம்பிக்கப்பட்ட "முன்னேற்றம்" என்ற பத்திரிகையைத் திறம்பட ஆசிரியராய் அமர்ந்து நடத்தினார். அப்பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த முடியாதவிதம் தடையுத்திரவு வந்தகாலத்தில் இரவோடிரவாய் 'நியூ பார்வேர்ட்' 'லிபர்டி' என்று பலவிதமாகப் பெயரை மாற்றி அமைத்து நடத்தி வாலிபர்களுக்கு வீர உணர்ச்சியை உண்டுபண்ணினார்.

தற்போது இவருக்கு வயது 41-ஆகியும் இன்னும் விவாகம் செய்துகொண்டவரல்லர். தமது இளமைப் பருவத்தை தேசசேவையிலேயே கழித்தார். இவர் சிறந்த புத்திமான். அரசியல் ஞானம் பெரிதும் பெற்றவர். அபேத வாதத்தில் பெரிதும் பற்றுடையவர். எனினும் காங்கிரஸ் கொள்கைக்கு மாறுகச் சேர்க்கமாட்டார். நிர்வாகத் திறமை பெரிதும் வாய்க்கப்பெற்றவர். இவருடைய தலைமையில் காங்கிரஸ் புத்துயிரும், புதுபலமும் பெற்று நாட்டுக்கு நலன் விளைவிக்கும் திட்டங்களை நிறைவேற்றிக் கொண்டுபோகும் என்பதில் சந்தேகமில்லை. இவருக்குக் கடவுள் நீண்ட ஆயுளையும், திடகாத்திரத்தையும் அளிக்கப் பிரார்த்திப்போம்.

வந்தேமாதரம்.

நியூ பட்டக்கார் பிரஸ், சேலம்.